உ

திருச்சிற்றம்பலம்.

இந்து தேவஸ்தான சீர்திருத்த மசோதா

வென்னும் 1922-ஆம் வருஷத்திய 12-வது பில்லாகிய

பேராந்தகார த்வம்சப்

# பிரசண்ட சூரியோதயம்.

இஃது

சிதம்பரஞ் செந்தமிழ்வேதப்பிரகாசசபையார்கள்

கேட்டுக்கொண்டபிரகாரம்

ஷை சபையின் அக்கிராசனாதிபதியவர்களாகிய

மஹாவித்துவான்

**தரு. ஞா. சண்முகசுவாமியவர்களால்**

இயற்றப்பெற்று

ஷை சபையாரவர்களால்



கும்பகோணம்

யதார்த்தவசனீ அச்சியந்திரசாலையில்

கலியுகாதி 5023 துந்துபி-ஆம் மாசிமீ 5உ

பதிப்பிக்கப்பட்டது.

உ

திருச்சிற்றம்பலம்.

# இந்து தேவஸ்தான சீர்திருத்த மசோதா என்னும் 1922-ஞூலத்திய 12-வது பில்லாகிய பேராந்தகார த்வம்ச பிரசண்ட சூரியோதயம்.

தமிழ்வேதம்.

புத்தர் சமண்கழுக் கையர் பொய்க்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செழுத் தும்மே.

இப்பூவுலகிலுள்ள நவகண்டங்களுள்ளும் மேம்பட்ட தவகண்டமாகிய இவ்விந்தியாவிலே, நம்முன்னோர்களாகிய பெரிய மஹான்கள், தங்கள் சந்ததியார்களாகிய நாமெல்லாம் வாக்கு மனோதீதராயும், சர்வாந்தரியாமியாயும் பெருங்கருணைத் தடங்கடலாயுமுள்ள கடவுளை வழிபட்டு வணங்கி வேண்டிய இம்மைப் பயனாகிய இஷ்டகாமியார்த்தங்களையும், மறுமைப் பயனாகிய போகமோக்ஷங்களையும் பெற்று, நித்தியானந்த சிரஞ்சீவிகளாய் நீடூழி வாழ்ந்துவர வேண்டுமென்னும் பெருங்கருணையினாலே, நமது இந்துமத வேதாமக சாஸ்திரங்களிலே கூறிய அநேக தேவாலயங்களையும், அத்தேவாலயங்களை ஷடி வேதாகமத்திற் கூறியபடி நித்திய நைமித்திய மஹோத்சவ பூசைகளைச் சரிவர ஒழுங்காய்ச் செய்து பரிபாலிக்கும் (அநேக சிஷ்யர்களாகி புத்திரசிகாமணிகளாகிய மஹான்கள் பெற்றளித்தருளவல்ல) குருமார்கள் களிப்புற்று வாழாநின்ற மடாலயங்

களையுந் தாபித்து, அவற்றினை மேன்மேலும் விருத்திசெய்து நம்மையெல்லாம் பரமதப் படுகுழியில் வீழ்ந்து மாயாவண்ணம் பாதுகாத்தருளினுர்கள்.

ஆகையினுலன்றே இந்துமதத்தினர்களாகிய நாமெல்லாம், நாளதுவரையும் பரமதப் படுகுழியில் வீழ்ந்து பாழாய்ப் போகாமல் நமதிந்துமதங்களிலேயே நிலைநின்று, இகபரவின்பங்களாகிய போக மோக்ஷங்களையெய்தியும், எய்திக்கொண்டும் பேரானந்தமாய் ஓரிடையூறுமின்றிச் சுகசீவிகளாய் வாழ்ந்து வருகின்றேம். இவ்வாறு நமக்கு நம்முன்னேர்கள் நீடித்து நிலைநின்று வாழ்ந்து வருவதற்கேதுவாகிய வேண்டியதைக் கொடுக்கும் கற்பகத்தருவைப்போலவும், நினைத்தவற்றைக் கொடுக்கும் சிந்தாமணியைப்போலவும், வேண்டிய வேண்டியாங்கீந்து, அறுசுவையோடுகூடிய சாப்பாட்டையுங் கொடுத்து, சரீரபோஷணை செய்து இரக்ஷிக்கும் காமதேனுவைப் போலவும், தேகத்தையும் அறிவையுங் கொடுத்து நம்மையெல்லாம் வருத்தாநின்ற புறப்பிணியாகிய வாத பித்த சிலேட்டுமமென்னும் முப்பிணியையும், அகப்பிணியாகிய ஆணவம் மாயை காமியமென்னும் மும்மலப்பிணியையும் நீக்கிச் சரீரத்தையும் ஆன்மாவையும் இரக்ஷித்து, இகபரவின்பங்களைப் பெற்று நித்தியானந்தர்களாயிருந்து, நீடூழிவாழச் செய்யாநின்ற மணி மந்திர ஔஷதசாலையாயும், நரகப் படுகுழியில் வீழ்ந்து மாய்ந்துபோகாவண்ணம் கொலை களவு கட் காமம் பொய் யென்னும் பஞ்சமா பாதகங்களாகிய துன்மார்க்கங்களினின்று நீக்கி நன்மார்க்கங்களாகிய சரியை கிரியா யோக ஞானங்களிலே செலுத்தும் மெய்ஞ்ஞானப் பிரகாசத்தை வீசி யிரட்சிக்கும் ஞானசூரியனுயும், இம்மையிலே அனுபவிப்பனவாகிய அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களையும், மறுமையிலனுபவிப்பனவாகிய சாலோக சாமீப சாரூப சாயுச்சியப் பெரும்பேறுகளையு மிடைவிடாமற் கொடுத்திரக்ஷித்துவாராநின்ற அக்ஷயப் பொக்கிஷமாகிய பெரிய பண்டாரங்களாயும், நம்மிந்துக்களையெல்லாம் பலவிதத்தினும் குறைபாடின்றிப் பரிபூரணமாய்க் காப்பாற்றி சம்ரக்ஷித்து வாராநின்ற தேவாலய மடாலயங்களின் அளவிலா மகிமைகளிலொன்றையேனு முணர்ந்துய்யும் ஆற்றலும் அறிவும் மதவுணர்ச்சியு நிரம்பாத ஆங்கிலேயப் படிப்பொன்றுமே யுணர்ந்த சில போலி இந்துக்

களையும், சட்டசபை மெம்பர்களையுஞ் சேர்த்துக்கொண்டு பேரா சைப் பேய்பிடித்து மயக்கங்கொண்டோர்களைக்கொண் டாட்சிபுரி யும் நமது காருண்ணிய கவர்ண்மெண்டாரவர்கள், அநேககோடி இந் துக்களுக்கும், அவ்விந்துக்களின் குருமார்களாகிய அநேக மடாதி பதிகளுக்கும், அக்குருமார்களின் பரிபாலனத்திற்குட்பட்டிருத்தற் குத்தக்க பெருமைவாய்ந்த தேவாலயங்களிடத்திலுள்ள தேவகுழாங் களுக்கும் விரோதமாய்த் தங்களிராஜபரம்பரையில் வந்த காருண் ணிய ராஜாதிராஜர்களாகிய மஹாராணியவர்கள் முதலாகிய சக்கிர வர்த்தினி சக்கிரவர்த்திகளின் அருமைத் திருவாக்குகளினின்று முண்டாகிய அமிர்தவசனமாகிய 'மதவிஷயங்களிற் பிரவேசிக்கிற தில்லை. அவர்களின் மதங்களையுந் தர்மங்களையும் தர்மசொத்துக்களை யும் அந்தந்த மதஸ்தர்களே பரிபாலித்துக்கொள்ளுங்கள்.' என்று திருவாய்மலர்ந்தருளிய வாக்கிற்குப் பங்கம் வந்திடுமே யென்றதை யும் யோசித்துப் பாராமல் பொருளொன்றையே விரும்பி 1922-ஞ 12-வதாகிய இந்தப் பில்லைக் கொண்டுவந்து சட்டசபையில் பாசுபண் ணுவித்து அதிற்கண்டபடி அமுலுக்குக் கொண்டுவருவார்களேயா னல், அன்றே நாளதுவரையும் தங்கள் தங்கள் உயிர்போலப் பாதுகா த்துவந்த தேவாலய மடாலயங்களும் அவ்வவற்றிற்கேற்பட்ட சொ த்துக்களும் கவர்ண்மெண்டு உத்தியோகஸ்தர்களாற் பலவாறு கவரப்பட்டு, வருவாய்குன்றி நித்திய நைமித்திய மஹோத்ஸவாதி கள் சரிவர நடவாமல், அவற்றைப் பரிபாலித்துவந்த மடாதிபதி களாகிய குருமார்களுக்கும், அவர்களின் சிஷ்யர்களாகிய அநேக கோடி இந்துமத மஹா ஜனங்களுக்கும், மிகுந்த கோபமும் வருத்த மும் மென்மேலும் விருத்தியாகித் தங்கள் தங்கள் கடவுளிடத்தில் விண்ணப்பித்துப் பிரார்த்தித்துத் திருவருட்பிரசாதப் பெரும் பலன்பெற்று, மனோவேகமாய்க் கடூரக்கினி ஜொலிக்கும் விஷவா க்குச் சாபத்தில் சொல்லம்பிணைப் பூட்டிச் சரமாரியாய்ப் பொழிந்து சாத்வீகப் போர் விளைவித்து, இப் பில்லுக்குக் காரணபூதர்களா யும், அவர்களுக்கு நட்பாளர்களாயும் உள்ளவர்களின் குலங்களை வே ரோடுகளைந்து, வெந்நீரூற்றி, விளங்காம லழிப்பதோடு, இராஜாங் கத்தாரிடத்திலும் எக்காலத்து நீங்காத பெருங் கோபத்தையுமுடை வர்களாக விருந்து, ஒத்துழையாப் பெருவிரதமுற்றுக் கடுந்தவஞ் செய்து வருவார்களென்பது திண்ணம். திண்ணம். இது நிற்க,

இப் பிரிட்டிஷ் கவர்ண்மெண்டார் இவ்விந்திய பூபாலகர்கள் (நம் மிந்துமதக் குருமார்கள்) இந்தியமத பாலகர்கள். இந்த இரண்டு பேர்களும் நாளதுவரையும் உடலுமுயிரும்போல ஒற்றுமையாயிருந்து நம்முடைய சரீரத்தையும் பொருளையும் ஆன்மாவையும் ஞானத்தையும் பாதுகாத்து வந்ததோடு நகமுஞ் சதையும்போலப் பிரிப்பின்றித் தங்கள் தங்கள் வேலைகளைச் செய்துகொண்டு சுகமாய் வாழ்ந்துகொண்டுவந்ததைப் பார்த்துப் பொறாமையுற்ற சில சுயகாரியப் புலிகளாகிய போலி உத்தியோகஸ்தர்களும், போலி இந்துக்களுங்கூடி யோசித்து நம்முடைய இராஜாங்கததாருக்கும் இந்துக்களுக்கும் மிகுந்த சீர்கேட்டையும் மித்திரபேதத்தையும் நீடித்து நிலைநாட்டி வைக்கும் இந்த 1922-ஞூ த்திய 12-வது பில்லைக் கொண்டுவந்து வெளிப்படுத்திவிட்டார்கள். இதனால் இந்து தேவாலய மடாலயங்களுக்கும் அவற்றிற் கேற்பட்ட சொத்துக்களுக்கும் மிகுந்த குறைவுண்டாகும். குறைவுண்டாகவே அத்தேவாலய மடாலயங்களில் வாழுங் குருலிங்கசங்கமங்களுக்கு மாமூலாய் நடந்து வந்த நித்திய நைமித்திய மகேஸ்வர பூசைகள் குறையும். அவைகள் குறையவே, தேவசானித்தியம் குறையும். அதுகுறையவே திருவருள்குறையும். அதுகுறையவே பத்திகுறையும். அது குறையவே சத்திகுறையும். அதுகுறையவே முயற்சிகுறையும். அதுகுறையவே செல்வங்குறையும். அதுகுறையவே அரசிறை குறையும். அதுகுறையவே அரசுகுறையும். அதுகுறையவே அறங் குறையும். அதுகுறையவே மறமிகும். அதுமிகவே பாவமிகும். அதுமிகவே பஞ்சமிகும். அதுமிகவே வறுமைமிகும். அதுமிகவே சாவுமிகும். அதுமிகவே தாரணி நாசமாகும். ஆகையால் இத்தியாதி கேட்டிற்குங் காரணம் தேவாலய மடாலய வழிபாட்டின்குறைவே யாம். இக்கருத்துப்பற்றியேதான் ஒளவையாரும் உலகநீதியில் "கோயிலில்லாவூரிலே குடியிருக்கவேண்டாம்" என்று கூறியருளினரென்க. இத்தேவாலய மடாலயவழிபாடு சரிவர நடவாமல் தவறி நடக்குமேயானல்;

"ஆற்றரு நோய்மிகு மவனிமழை குன்றும்
பொற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றனே."

எனத் திருமூலநாயனார் திருமந்திரத்திற்கூறியபிரகாரம், தன்னையணைந்துபாசித்துக்கொண்டிருந்த மார்க்கண்டேயரின் உயிரைக் கவரவந்த எமதருமராசனை யுதைத்து மாய்த்தருளிய சிவபெருமானுடைய கோயில்களிலே விதிப்படி செய்யப்பட்ட நித்திய நைமித்தியாதி பூசைகள் தவறி நடந்தால் உலகத்தில் பொறுத்தற்கரிய பலவியாதிகள் அதிகரிக்கும். மழைகள் குறைந்துவிடும். இவ்வுலகத்திலிருந்து உலகினைமாத்திரம் பரிபாலித்துக்கொண்டு, அவ்வுலகினையுண்டாக்கியதற் குயிராயிருந்து பரிபாலிக்கும் கடவுளி னிருப்பிடமாகிய தேவாலய மடாலயங்களைப் பரிபாலித்துவராமல் விட்டுவிட்ட துதித்தற்கரிய மன்னர்கள் யுத்தத்தில் வலிகுன்றி வருந்துவார்கள். ஆகையால் நமது பிரிட்டிஷ் கவர்ண்மெண்டாரவர்கள் தங்களைப்போல இந்துமத ராஜாங்கத்தாராகிய நமது இந்து மடாதிபதிகளாகிய குருமார்களிடத்திலேயே ஷை மடாலயங்களையும் தேவாலயங்களையும் எப்போதும்போலவே ஒப்புவித்துச் சரிவரப் பரிபாலித்து வரும்படிசெய்து, தங்கள் மதத்தைப்போல நம்மிந்துக்களையும், நம்மிந்துமதங்களையும் விருத்திபண்ணிக்கொண்டு வருவார்களேயானால் இந்துக்களுடைய பேரன்பிற்கும் பேராதரவிற்கும் பாத்திரமாகி நீடூழி நமது இந்துதேச ராஜாங்கத்தாரோடு வாழ்ந்துவருவார்கள்.

இக்கருத்துப்பற்றியேதான் ‘பெரியாரைத் துணைகொள்’ எனக் கூறியருளியதூஉமென் றுணர்க.

இப்பொழுது நமது தென்னிந்தியா கவர்ண்மெண்டார் 1922-ம் வருஷத்திய 12-வதாகிய இந்தப் பில்லை அதிசீக்கிரமாய்க் கொண்டுவர ஒரு ஆறுமாதகாலமாவது டயங்கொடுத்து, இந்துமஹா ஜனங்களின் அபிப்பிராயத்தையுங் கேட்டு இந்துதேவாலய மசோதாவை சீர்திருத்தாமல், மதவிஷயங்களி லொன்றேனுமுணராத சில போலி இந்துக்களின் சாக்ஷியங்களை விசாரித்துக்கொண்டு, சட்டசபைகளில் விட்டு பாஸ் செய்து அமுலுக்குக் கொண்டுவந்து ஷை தேவாலய மடாலய சொத்துக்களைக் கவர்ந்து, சாமான்ய பரமதவாணர்களுக்கும் உபயோகித்து, இந்துமதக் குருமார்களுக்கும் அவர்களின் சிஷ்யர்களாகிய இந்துமஹா ஜனங்களுக்கும் மிகுந்த ஆத்திரத்தையும் க்ஷாத்திரத்தையும் மேன்மேலும் பெருக்கிக் கொள்வதானது, அதர்மத்தையும் அநீதியையும் உண்டாக்கித் தங்களுக்கும் தங்கள் இராஜாங்கத்திற்

கும் நீடித்து நிலைநிற்கும்படியான விரோதத்தையும் கலகத்தையும் தாங்களே யுண்டாக்கிக் கொண்டதேயாகும். ஆகையால் தீர்க்காலோசனை செய்து மடாலய தேவாலயங்களின் பொருள்களின்மேற் பிரவேசிக்காமல், வேறுவழியாற் பொருளீட்டித் தங்கள் கருத்தினை நிறைவேற்றி வாழ்வார்களாக.

இத்தேவாலய மடாலய தருமங்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தாதரிதது மேன்மேலும் விருத்திபண்ணி வரவேண்டியது இராஜநீதி. அஃதின்றி மேற்கூறிய தேவாலய மடாலய சொத்துக்களையும் எடுத்துக்கொண்டு வேறு வீண்செலவுகள்செய்து இந்துக்களுக்கும இந்துமதங்களுக்கும் குறைவையும் அவமானத்தையும செய்துவருவது அநீதியும் அக்கிரமமுமாகும் ஏழையழுத கண்ணீர் கூரிய வாளொடொக்கும் என்பதையும் உணர்ந்திலர். அந்தந்தோ பாவம! பாவம்! கெடுகாலத்திற்கு வித்தேபோலும.

சக்கிரவர்த்திக்கேற்பட்ட சொத்துக்களைக் கவர்ந்து குடிகளுக்குக் கொடுத்தவன் எப்படி அச்சக்கிரவர்த்தியால் தண்டிக்கப்படுவானோ, அப்படியே சர்வலோகநாயகராகிய கடவுளுக்கேற்பட்ட சொத்தைக் கவர்ந்து மற்று சாமான்ய பசுக்களுக்குக கொடுத்தவர்களும் அஃதே கடவுளாலே தண்டிக்கப்படுவார்களென்பது திண்ணம், திண்ணம்.

ஆகையாலே அச்சக்கிரவர்த்தியின் சொந்தப் பொருளைக் கவர்ந்தவனும் கவர்வதற்குடந்தையா யிருந்தவனும் பார்த்துக்கொண்டு தடுக்காதிருந்தவனுந் தன்னவனு யிருந்தாலும் மற்ற யாவராயிருந்தாலும், அச்சக்கிரவர்த்தியாலும் அவனுடைய அன்புள்ள வேலைக்காரர்களாலுந் தாக்ஷண்ணியமின்றித் தண்டிக்கப்படுவதுபோலச் சர்வலோகநாயகராயும் கருணாநிதியாயுமுள்ள சிவபெருமானுக்குச் சொந்தமாக வைக்கப்பட்டிருக்கிற தேவாலய மடாலய சொத்துக்களை இந்த 1922-ஆம் 12-வது பில்லாற கவர்ந்து கொஞ்சமேனும் பாத்தியதையில்லாத சாமாண்ய பரமதஸ்தர்களின உபயோகத்திற்கும் பங்கிட்டு "பசுவை யடித்துப் பார்ப்பானுக்குத் தானங்கொடுக்கும் பாதகர்" போலப் பரிந்துதவ எண்ணிய பரம காருண்ணிய கவர்ண்மெண்டாரும் அதற்குடந்தையாயிருக்கும் மந்திரிமார்களும் அதனைப் பாசுபண்ணும் இந்துப் பிரதிநிதிகளாகிய சட்டசபை

மெம்பர்களும் இதனை அமுலுக்குக் கொண்டுவந்து ஷை பொருளை யெடுத்துப் பங்கிட்டுப் பகிர்ந்தளிக்கும் உத்தியோகஸ்தர்களும் சர்வேஸ்வரனுகிய கடவுளாலே தாக்ஷண்ணியமின்றித் தண்டிக்கப் படுவதுபோல, இவ்வாறு நம் உயிர்த்துணையாயும் சர்வ வல்லமை யுள்ளவராயும் பாரபக்ஷமில்லாதவராயுமுள்ள சிவபெருமானது தேவாலய மடாலய சொத்துக்களைக் கவர்ந்துகொண்டு போவதற் கேதுவாகிய இந்தப் பில்லைப் பாசுபண்ணுமல் தடுத்துச் சொற்போர் புரிந்து நீதிவாதாக்கினியால் நீறுக்காமல், சும்மா பார்த்துக்கொண்டு பயந்துப் பதுங்கிக்கொண்டிருப்போமானுல் அக்கடவுளாலே இந்து மதத்தினர்களாகிய நாமும் தாக்ஷண்ணியமின்றித் தண்டிக்கப் படுவோமென்பது சத்தியம். சத்தியம். சத்தியம்.

ஆகையால் இந்துக்களே! இந்துமதாபிமானிகளே! ஷை தேவாலய மடாலய பரிபாலகர்களாகிய இந்துமதக் குருமார்களே! தூங்காதீர்கள்! தூங்காதீர்கள்! எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! நம் தென்னிந்தியாவிலுள்ள ஜில்லாக்களிலும் தாலுக்காக்களிலும் கிராமங்களிலும் மகாநாடு கூடுங்கள். ஷை பில்லைக் கண்டனஞ்செய்து ரிஸலூஷன் பாசுபண்ணிப் பிரசிடெண்டு கையெழுத்திட்டுப் பிரிண்ட் செய்து பல பிரதிகளையும் ரிஜிஸ்தர்செய்து, கவர்னரவர்கள், சென்னைச் சட்டசபை மெம்பர்கள், ராஜப்பிரதிநிதியவர்கள், மந்திரியவர்கள், பார்லிமெண்டார், சக்கிரவர்த்தி முதலிய இராஜ ராஜாங்க உத்தியோகஸ்தர்களுடைய, கரமலரிலும், முகமலரிலும், அகமலரிலும் சரமாரியாய்க் கும்பல் கும்பலாய்ப் பொழியுங்கள்! பொழியுங்கள்! செழியுங்கள்! விழியுங்கள்! நீதிவாதம்புரியுங்கள்! ஷை பில்லை முளைக்கையிலேயே பிடுங்கி யெறியுங்கள்! தறியுங்கள்! முறியுங்கள்!

இவ்வாறு செய்து இந்தப் பில்லைத் தலையெடுக்கவொட்டாமல் நீதிவாதாக்கினியினுலே நீறுக்கினுற்ருல், இந்துக்களாகிய நீங்கள் யாவருங் கடவுளருளுக்குப் பாத்திரமாயும் நேத்திரமாயுமிருந்து, இந்துக்களையும் இந்து மதங்களையும் இந்து மடாலய தேவாலயங்களையும் சொத்துக்களையும் காப்பாற்றி நீடூழி வாழ்ந்து வருவீர்கள்.

தேவாலய மடாலய தர்மபரிபாலனச் சிறப்பு.

கடம்பவன புராணம்.

இம்மைப் பயனைக் குறியாதே யிறைவன் றிருவா லயமதனுட்
செம்மை சிறக்க மாபூசை செய்விப் பாரே சிறப்புடையார்
இம்மைப் பயனைக் குறித்தியற்று மதிகா ரியர்நா யுடலெடுப்பர்
புன்மைப் புலைய னெனுமுடலும் பொருந்தி விடுவர் புகழினையே.

ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருவடிவாழ்க.

இங்ஙனம்

திரு. ஞா. சண்முகத்தம்பிரான்,
அக்கிராசனாதிபதி,
செந்தமிழ்வேதப்பிரகாசசபை,
சிதம்பரம்.

